18th February 1961]

The Hon. Sri R. VENKATARAMAN : We are living in a free and competitive economy and it is not possible to say that only certain kinds of goods should be exported. It is up to the buyers to get the goods marked by the Institute which we have here in Madras for marking cloth. We have a voluntary marking scheme and the importers should take care to get goods which are marked under the scheme. Then there will be less difficulty about the quality of the cloth exported.

Srimathi T. N. ANANDANAYAKI : 'பிளீடிங் மெட்ராஸ்' போன்றவைகளுக்கெல்லாம் நல்ல 'டிமாண்டு' அமெரிக்காவில் இருக்கிறதென்று சொல்கிறீர்களே, அதனால் அமெரிக்காவுக்கு ஏன் ஒரு தூதுகோஷ்டி அனுப்பக்கூடாது?

The Hon. Sri R. VENKATARAMAN : அமெரிக்காவுக்கு தூது கோஷ்டி போய் வந்தார்கள். அதன்பின் தான் 'டிமாண்டு' ஏற்பட்டது. ஆனால், தரம் குறைந்த துணியை அனுப்பி அந்த டிமாண்டை இப்பொழுது நாம் குறைத்துவிட்டோம்.

Sri M. R. KANDASWAMI MUDALIYAR : நம் நாட்டிலே மிகப் பெரிய குடிசைத் தொழிலாக கைத்தறித் தொழில் இருப்பதாலும், அந்தத் தொழிலை நம்பி பெரும்பாலான தொழிலாளிகள் இருப்பதாலும், இந்தத் தொழிலை முன்னேற்ற வேண்டி, வெளி நாடுகளுக்கு தூது கோஷ்டி அனுப்பி, எந்த எந்த நாடுகளில் நம்முடைய கைத்தறி துணிக்குக் கிராக்கி இருக்கிறதென்று தெரிந்து, அந்தந்த இடங்களில் உடனடியாக மார்க்கெட் ஏற்படுத்திக் கொடுக்க ஏன் அரசாங்கம் முன்வரவில்லை? சமீபத்தில் வெளியே சென்று வந்தவர்கள், நம் துணிக்கு சிலோன் போன்ற இடங்களில் நல்ல கிராக்கி இருக்கிறதென்று சொல்லியிருந்தும், உடனடியாக அவ்விடங்களுக்கு தூது கோஷ்டி அனுப்பாமலிருக்கக் காரணம் என்ன?

The Hon. Sri R. VENKATARAMAN: நான் சொன்ன பதிலைக் கனம் அங்கத்தினர் புரிந்துகொள்ளவில்லை. தூது கோஷ்டி சென்று வந்து இன்னும் இரண்டு மாதம்கூட ஆகவில்லை. அடிக்கடி தூது கோஷ்டி அனுப்புவதினால் வியாபாரம் ஆகாது. விற்பனை செய்வதற்கு முக்கியமாக தரம் நன்றாக இருக்க வேண்டும். தரம் சரியாகக் காப்பாற்றப்படாததால் தான் நமது வியாபாரம் கொஞ்சம் பாதிக்கப்படுகிறது.

*Cleanliness Day.*

*375 *Q.*—Sri S. M. ANNAMALAI : கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960 அக்டோபர் 2-ந் தேதியில் Cleanliness Day கொண்டாடும்படி மத்திய சர்க்கார் மாநில சர்க்காரைக் கேட்டுக்கொண்டார்களா?

(இ) அப்படியாயின் எத்தனை இடங்களில் கொண்டாடப் பட்டது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) Yes, Sir.

(b) The day was celebrated throughout the State.

SRI S. M. ANNAMALAI : இந்த விழாக் கொண்டாடு வதற்காக மத்திய சர்க்கார் எவ்வளவு பணம் தருகிறார்கள் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அந்தத் தகவல் ஒன்றும் இல்லை. அரசாங்கமே ஆங்காங்கு பிரசாரம் செய்தது. நேரடியாக அனேக இடங்களில் தெரு சுத்தம் செய்யப்பட்டது. இம்மாதிரி செய்வது இதுதான் முதல் வருஷம். இதில் பொது மக்களும் நன்றாக ஒத்துழைத்தார்கள். மற்ற வருஷங்களிலும் இது நன்றாக நடக்கும் என்று எதிர்பார்க்கிறோம்.

SRI A. A. RASHEED : Sir, may I know whether any "brain washing" has been done during the Cleanliness Day?

THE HON. SRI M. A. MANICKAVELU : All those having brains would have had a wash, I suppose.

*Devaswom Board*

MR. SPEAKER : As the hon. Member who gave notice of question No. 376 is not in his seat, the question and answer will be printed in the proceedings.

* 376 *Q.*—SRI T. T. DANIEL : Mr. T. S. RAMASWAMI : } Will the Hon. the Minister for Home be pleased to state—

(a) whether the rules for the management of the Kanyakumari Devaswom Board have been framed;

(b) the rate of travelling allowance allowed to them; and

(c) whether any honorarium is given to them?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) Rules under section 29 (g) of the Madras (Transferred Territory) Incorporated and Unincorporated Devaswoms Act, 1959, regarding the grant of travelling and halting allowances to the members of the Kanyakumari Devaswom Board have been framed. The rules under the other provisions of the Act are under the examination of the Government.

(b) The members of the Kanyakumari Devaswom Board are eligible for travelling and daily allowances of mileage at the rates allowed to Members of the First-class Government Committees.

(c) No, Sir.